உ



கடவுள் துணை.

---

# சிவத்தியானவல்லரி.

# மீனாட்சியம்மன் தோத்திரம்

# கைத்தலமாலை.

---

இவை

அஷ்டாவதானம்-பூவை,

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன

---

1892 ௵.

கடவுள்துணை.



# சிவத்தியானவலஹரி.



இரங்கல்-தாழிசை,

நீலகண்டசோமசூர்யவக்கினிநேத்ரசேர்பிதம், கோலமாங்கரிப்புலிகுலாவுமாண்மழுப்படை, ஏலமார்ஜடா தரமிடத்தில்பத்னிகோமளம், சீலமார்கயிலைவாழ் பரஞ்சிவம் சிவஞ்சிவம். (க)

சகலலோகநாயகஞ் சதாசிவாயமாம்பரம், நிகிலதேமனைதத்யபூத நிர்மலாயரூபகம், அகிலபஞ்சபூத மாயஞாதிசைவமாஞ்சுகம், ஜகவிநோதபரஞ்சிவம்சிவம் சிவம், (உ)

அச்சுதனயனும்பாடி வணங்கிவ
ழ்த்தவுங், கச்சுபூண்முலைக் கௌரிகா
தலோடுவெப்புற, மெச்சவானரம்பை மா
ர் வியன்கவரிவீசவு, மிச்சையற்றநடன
வெந்தை யேபாஞ்சிவம் சிவம், (ங)

சுடலையாடுவான்கரக் கபாலதூளி
தப்பிரியன், சுடலையாடிடுங்குழாஞ் சுகி
க்கவல்லநாயகன், படியுளோர்துதித்தி
றைஞ்சும் பாநுகோடிசேகரன், திடசி
வோகமேபாஞ் சிவம் சிவம் சிவம், (சு)

ஆலயம்பலவுள வநேகதேவர்தா
முள, சீலமும்பலவுள தெருளுளோர்ப
யவுள, மாலையனமாராதி மாதவர்பலரு
ள, காலகாலனேபாஞ் சிவம் சிவம், (ரு)

அங்குமிங்கு மெங்குமாயாதியாய னாகியாய், திங்கள்சூடு செஞ்சடைத்தி கழுநின்றபூரணம், துங்கமேவுதொண்ட ர்கடுதிக்கநின்றதற்பரம், எங்கணையனே பரஞ் சிவம் சிவம் சிவம், (சு)

முத்தராகிமூவராய்முதல்வராயில ங்கிடும், பித்தனாகிநின்றசோதி யேசொ லற்கரியதாம் ஒத்தனத்து மேத்தவல்ல வெகுண்டலக்கனலெனும், அத்தனேப ரஞ் சிவம் சிவம் சிவம். (எ)

ஞாலம்யாவையும்படைத்த நான் முகத்தனோடுமால், சீலமாரடிமுடியுலா வித் தேடிக்காணொணா ஸ்தூலமாயிருந் த சோணசயிலனே கதித்தெழும், ஆல முண்டகண்டனேபரஞ் சிவம்சிவம்()

உலகில்வந்தசுந்தரற்குவந்தனூது சென்றவன், இலகுமப்பனைத் தடுத்து வின்பமாய் விழுங்கினேன் அலகிலாரி களைப் பரியதாக்கிவிற்றவன், நிலநிறை ந்தவஸ்துபோற்பரஞ் சிவம்சிவம்.

முத்திசேர்ந்திடும்ப்ரதாப முக்கு ணத்துளதமமாந், தக்கனைத்துணித்தவீ ர பத்ரதாணுதந்தவன், செக்கர்மேனி யெம்பிரான் திருந்தகிலமியாதினும், மிக் கஞானியேபரஞ் சிவம்சிவம்சிவம்.

சிவத்தியானவலஹரி

முற்றிற்று.



உ

சிவமயம்.

---

அம்பிகை துணை.

மதுரை

# மீனாட்சியம்மன்.

தோத்திரம்.

காப்பு.

---

சத்தியாய்ச்சிவ மாகித்தனிப்பர
முத்தியானமுதலைத்துதிசெய
சுத்தியாகியசொற்பொருணல்கு
சித்தியானைதன்செய்யபொற்பாதமே

அறுசீரடியாசிரிய விருத்தம்.

எனக்கயன்றன்விதிப்படியோ
பூருவத்தின் செயல்தானோ
வேதோவம்மா

உனக்கடிமையானபின்பிங்
கேதுகுறைவந்தாலு
முனக்கேபாரம்

வனக்கிளியேமலர்த்திருவே
சொக்கரிடபங்கில்வளர்
வனசமாதேயென்

மனக்கவலையார்க்குரைப்பே
னெனக்கிரங்கவேண்டுமம்மா
மதுரைவாழ்வே. (க)

இனம்பிரிந்தமான்றுபோ
லுடல்பதைத்துவலிமையோ
டிளைத்தெந்நாளும்

மனம்பதறியுழன்றுழன்றிங்
கடியேனுக்கருள்சொற்ற
வன்னெஞ்சோதான்

நினம்படைத்தபெருக்கமதோ
திருவனந்தம்பர்ாமுகமோ
தாயேயென்மேல்

வனம்பறவிக்கடம்பவன
சொக்கர்பங்கில்மீனுட்சி
மதுரைத்தாயே, (உ)

தாயிழன்றகன்றதுபோல்
பரதவித்துநிலைகுலைந்து
தவித்தெந்நாளும்.

தீயிலும்மெழுகதுபோ
லுருகிமனம்வெறுங்கூடாய்
திகைத்தேனம்மா

தூயமலர்புரந்திருவே
நடம்புரியும்பதத்தாளே
தோகைமாதே

மாயவற்குச்சகோதரியே
சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே, (ஙூ)

பொல்லாதநெடுநீலி
பழிக்கஞ்சிபழிசுமக்கப்
போராய்போராய்

சொல்லாதநாளுமுண்டோ
சொன்னாலுங்கேட்கிலையோ
யென்சொற்கூந்தல்

யெல்லாரும்வாழ்திருக்க
நானொருவன்தாழ்ந்திருக்க
வியலோவம்மா

வல்லாருங்களபமுலை
மாமயிலேமீனாட்சி
மதுரைத்தாயே. (ச)

இருபொழுதுவருமையினா
லுணாதினமும்பிணியதனா
லிளைத்துவாடி

உருகுவது அயன்விதியோ
அல்வென்றுனுன்செயலோ
உரைக்கமாட்டேன்

திருவுருவே அருளொளியே
தெள்ளமுர்தேசெயிழையே
தேவர்போற்றும்

மருவணியுங்குழலணங்கே
சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (ரு)

நஞ்சுதின்றபோதுபோ
லுட்டல்மயங்கிவருமையினால்
னவின்றெந்நாளும்

சஞ்சலமேசமுத்திரமா
மலையனிற் றுரும்பதுபோல்
தவித்தேனம்மா

கொஞ்சுங்கிளிமொழியாளே
கஞ்சமலர்கரத்தாளே
தோகைமானே

வஞ்சியிடைதிருவனங்கை
சொக்கர்பங்கில்மீனுட்சி
மதுரைத்தாயே. (௬)

அதிமதுராவிதாணம்
பாடுவதுஉன்செயலோ
அதுவல்லாமல்

நதிதறித்தோரிடப்பாக
விளங்குகின்றமாமயிலே
நளினமானே

கெதிபெறவேயடியேனுக்
குனதுபதந்தந்தருள்வாய்
கிருபைவைத்து

மதிநுதல்போல்திருவனங்கை
சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (எ)

உலையிலிடுமெழுகதுபோ
லுருகிமனம்வெறுங்கூடா
யுலர்ந்துவாடி

நிலைகுலைந்துமதிமயங்கி
நின்றுமிகப்பாதவிக்க
நீதியோசொல்

கலைமகளேவடிவணங்கை
கமலமுகத்திருமாதே
கருணையாளே

மலைமகளே அறந்தழைக்கும்
சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (அ)

இளமைதனில்வறுமையினால்
மனதுமிகநொந்துருகி
யிளைத்துவாடி

விளைநிலத்திலளர் விழுந்த
வாறதுபோலடியேனும்
விளங்கநின்றேன்

குழைபுடச்சியன்னநடை
குயில்மொழிச்சிநீகருணை
கூர்ந்தாட்சி

மழலைமொழிகுயில்வண்ணங்கை
சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (கூ)

திடமுடனேயுனைப்பாட
செல்வமுண்டாம்
கல்வியுண்டாய்சிறப்பதாக

அடவுடனேயிப்புவியி
லெந்தனுடமொழிக்கிரங்கி
யருளேசெய்து

சடைமுடியாரிடப்பாகம்
பச்சைநிறமாய்நின்ற
தையல்மானே

மடமயிலேஉன்னுடைய
மலர்ப்பாதம்தந்தருள்வாய்
மதுரைத்தாயே. (க0)

மதுரைமீனாட்சியம்மன்
தோத்திரம்.
முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.



# கைத்தலமாலை.

முன்ன மாலய னிந்திர னமரர்கண் முனிவர், பன்னு மாரணம் போற்றுத ற் கரியநம் பரமன், மின்னுலாவியசடா டவிக் கடவுள்வீற்றிருப்ப, வென்னமா தவஞ்செய்ததோவென துகைத்தலமே.

அன்ன மாயும்வெண் பிறைமருப்பே ன மென்றுயு, முன்ன நான்முக ஞரண ன் றேடருமுதல்வன், பின்னு வார்ச டைப் பெருந்தகைப் பீடமாக் கோடற், கென்ன மாதவஞ் செய்ததோ வெனது கைத் தலமே. (உ)

தன்னை மேவிவந் தனைபுரி பவன்செ ய றடுப்பா, னுன்னி மேல்வரும் வெங்

திறற் கூற்றினை யுதைத்த, மன்னுமாலை யற்கரியவன் வந்துவீற் றிருப்பவென் ன மாதவஞ் செய்ததோ வெனதுகைத் தலமே. (௩)

தன்னை நேர்வட காசிதென் கயிலை கேதார, மன்னமார்வய லம்பல நமன்ற மர் வராமற், கன்னன் மாமதற் றெறு ம்விழிக் கடவுள்வீற் றிருப்ப, வென் னமாதவஞ் செய்ததோ வெனதுகை த்தலமே. (௪)

கன்னலாரமு தினுஞ்சுவை தருவ தாய்க் காண்பா, னுன்னு மாலயற் கரிய தா மொருமலை யுச்சி, மன்னு மோர்பவ ப் பிணிமருந் தெளிதுவந் திருப்ப, வெ ன்ன மாதவஞ்செய்ததோவெனதுகைத் தலமே. (௫)

அன்னை யாகியின் னுயிர்க்குயிராமரு ளாளன், பொன்னு மாமமு மணியு மா மமுதமும் போல்வான், றன்னை நாடொ றுங் கண்டுகண் களிப்பதாச் சார்தற், கென்னமாதவஞ் செய்ததோ வெனது கைத் தலமே. (கா)

அன்ன மூர்பவன் முதலியோ ரபய மென்றடைய, முன்னமாலமுண் டவர் துயர் களைந்தருண் முதல்வன், மின்னு மாமழு வலமுடை வீரன்வீற்றிருப்ப, வென்னமாதவஞ் செய்ததோ வெனது கைத் தலமே. (எ)

பன்னு மாமறை தமிழினாற் பாடநம் பிக்குப், பொன்னு மாடையு மணிகளு மூர்தியும் பொருளும், மின்னும்பவ னருளினன்மேவிவீற்றிருப்ப,வென்னமா தவஞ்செய்ததோவெனதுகைத்தலமே.

பின்னும் வார்திரைக் கடலின்வீழ்ந்
தமிழ்வையிற் பிடிப்ப, முன்னமோர்பு
ணை யகப்படு முறமைபோற் பிறப்பி,
னின்னல் கூர்பொழு தெம்பிரான் வந்
துவீற் றிருப்ப, வென்னமாதவஞ்செய்
ததோ வெனதுகைத் தலமே. (கூ)

தன்னை யோர்பொழு திறைஞ்சுவான்
கருதியித் தரைமேன், மன்னுமாலயன்
யாண்டுளதெனவலம ராமறபொன்ன
வாமலர்ச் சடையுடைப் புனிதன்வீற்றி
ருப்ப, வென்ன மாதவஞ் செய்ததோ
வெனதுகைத் தலமே. (கய)

கைத்தலமாலை-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

சிவப்பிரகாசசுவாமிகள்

திருவடிவாழ்க.

